(*b*) how many of them—

(i) were settled; and

(ii) are still pending?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) & (*b*) During the period from 1st April 1957 to 31st March 1958—

| | | |
|---|---|---|
| Number of disputes taken up for conciliation | ... | 1,013 |
| Number of disputes settled by conciliation ... | ... | 632 |
| Number of disputes referred for adjudication | ... | 272 |
| Number of disputes where reference was refused. | | 82 |
| Number of disputes pending consideration with Government ... ... ... ... ... | ... | 27 |

This is for the period from 1st April 1957 to 31st March 1958.

* 261 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the number of labour disputes settled by conciliation in 1957; and

(*b*) the number of disputes pending settlement before the industrial tribunals?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) 1,757.

(*b*) Eighty-eight disputes were pending before the Industrial Tribunal, Madras, and Labour Courts at Madras, Madurai and Coimbatore at the end of 1957.

SRI M. KALYANASUNDARAM: மொத்தத் தகராறுகளில் எத்தனை தகராறுகளில், பழிவாங்கும் நோக்கத்துடன் தொழிலாளர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டனர் என்ற புள்ளிவிவரம் சர்க்காரிடம் இருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN: மூலக் கேள்வியில், இண்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் எத்தனை என்று கேட்கப்பட்டிருந்தது. 1957-ல் "இண்டிவிஜுவல் க்ரீவன்ஸ், இண்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ்" முதலிய எல்லாம் சேர்ந்து மொத்தம் 8,592 "க்ரிவன்ஸெஸ்". அவைகளில் 6,524 "இண்டிவிஜுவல் கம்ப்ளெய்ண்ட்ஸ்"; 1,757 தான் "இன்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ்."

SRI S. LAZAR: What is the average time taken by the Government for the disposal of cases—from the time the matter is taken up by the Government for conciliation until it is disposed of by the Tribunal? Is there any proposal before the Government for reducing the time-limit?

THE HON. SRI R. VENKATARAMAN: In cases of individual disputes, it is three months. In cases of industrial disputes without complications, it is four to five months. But where there are rival unions and complications, it depends on the nature of the dispute.

SRI J. MATHA GOWDER: முதலாளிகளும் சர்க்காரும் தொழிற் சங்கப் பிரதிநிதிகளும் சேர்ந்து முக்கூட்டுக் கூட்டம் நடத்தி சமரசத்தை ஏற்படுத்திய பிறகு, சர்க்கார் செய்த சிபாரிசை முதலாளிகள் சங்கம் அமுல் நடத்தாவிட்டால், சர்க்கார் என்ன நடவடிக்கை எடுக்கிறார்கள் ?

17th September 1958]

**The Hon. Sri R. VENKATARAMAN**: சர்க்கார் "சிபாரிசு" தான் செய்கிறது. சிபாரிசை முதலாளிகள் ஒப்புக்கொள்ளாவிட்டால், "முதலாளிகள் சிபாரிசை ஒப்புக்கொள்ளவில்லை" என்று தான் சர்க்கார் சொல்ல முடியும்; சர்க்கார் வேறு ஒன்றும் சொல்லமுடியாது.

**Sri P. S. CHINNADURAI**: தொழிலாளர்களுக்குச் சாதகமாக தொழில் கோர்ட்டுகள் வழங்கியுள்ள தீர்ப்பை எதிர்த்து எத்தனை வழக்குகளில் முதலாளிகள் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போயிருக்கிறார்கள்? சுப்ரீம் கோர்ட்டில் வாதாடுவதற்குரிய வசதியில்லாத நிலையில் தவிக்கும் தொழிற் சங்கங்களுக்காக வக்கீல் வைத்து வாதாடி தொழிலாளர்களுக்கு உதவ சர்க்கார் முன்வருவார்களா?

**The Hon. Sri R. VENKATARAMAN**: எத்தனை வழக்குகளில் சர்க்கார் வக்கீல் வைத்து வாதாடினார்கள் என்பதற்கு தனிக் கேள்வி கேட்டால் நான் அதற்கு விவரங்களுடன் பதில் சொல்கிறேன். எந்த எந்தத் தகராறுகளில் சர்க்கார் செய்த "ரெபெரென்ஸ்" தவறு என்று வாதாடப் படுகிறதோ, அந்த வழக்குகளிளெல்லாம், தாங்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கையை நிலைநாட்டுவதற்காக சர்க்கார் வக்கீல் வைக்கிறார்கள். மற்ற இடங்களில் சர்க்கார் வக்கீல் வைப்பதில்லை.

**Sri K. B. S. MANI**: தொழிற் சங்கத் தகராறுகளைப்பற்றிய ஆயிரக்கணக்கான வழக்குகள் கோர்ட்டில் நடந்திருப்பதாக கனம் மந்திரி தெரிவித்தார். தொழிலாளர்கள் நன்றாக வாழ வேண்டுமென்று கருதி அரசாங்கம் ஒரு சட்டத்தை இயற்றியிருக்கிறது. தொழில் தகராறுகள் சம்பந்தமாக, முதலாளிகளும் தொழிற் சங்கங்களும் சர்க்காரும் சேர்ந்த முக்கூட்டு மகாநாடுகள் கூடி நல்ல முடிவுகள் கண்டிருக்கின்றன. அப்படியிருக்கும்போது, ஆயிரக்கணக்கான தொழிற் தகராறு வழக்குகள் கோர்ட்டில் இருக்கின்றன என்றால், சட்டத்தை மதிக்காமல் நடந்து கொண்டிருப்பவர்கள் யார்? சட்டத்தை மதிக்காமல் நடப்பவர்கள் பேரில் கடுமையான நடவடிக்கை எடுப்பதற்கு வகைசெய்யும் முறையில் சட்டத்தைத் திருத்த அரசாங்கம் முன் வருமா?

**The Hon. Sri R. VENKATARAMAN**: கனம் அங்கத்தினர் சொல்வது சரியல்ல. மொத்தம் நான்கு கோர்ட்டுகள் இருக்கின்றன. நான்கு கோர்ட்களிலுமாக மொத்தம் 88 வழக்குகள் தான் இப்போது "பெண்டிங்" காக இருக்கின்றன. மேலும் நான் முன்பு சொன்னபடி, 1,800 தகராறுகளில் நான் முன்பு குறிப்பிட்ட ஒரு வருட காலத்தில் 272 தான் கோர்ட்டுக்கு விடப்பட்டிருக்கின்றன. 272 வழக்குகளை ஆயிரக்கணக்கான வழக்குகள் என்று சொல்வது சரியாகாது என்று நினைக்கிறேன்.

**Mr. SPEAKER**: There are five more questions. I will allow five more minutes and finish them. I think the House has no objection.

**Sri K. SATTANATHA KARAYALAR**: பஞ்சாலைத் துறையில் எத்தனை எத்தனை வழக்குகள் என்பதைப்பற்றி தனியான புள்ளிவிவரங்கள் உண்டா?

**The Hon. Sri R. VENKATARAMAN**: தனி கேள்வி வேண்டும்.

**Sri M. JAGANNATHAN**: Arising out of the answer of the Hon. Minister, it is seen that there are 21 cases pending before the Government for their consideration. May I know how long will the Government take to finally dispose of those cases?

**The Hon. Sri R. VENKATARAMAN**: They should have been disposed of long ago. On the given date, that is on the 31st March 1958, these cases were pending before the Government.

[17th September 1958

Sri M. KALYANASUNDARAM : தனிப்பட்ட தொழிலாளர்கள் பழி வாங்கப்படுவதின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறபடியால் பழி வாங்கப்படும் வழக்குகள் நேரடியாகவே தொழிலாளர் கோர்ட்டுக்கு போகக் கூடிய வழியில் சட்டத்தைத் திருத்த சர்க்காருக்கு ஆலோசனை உண்டா ?

The Hon. Sri R. VENKATARAMAN : ஷாப் சட்டத்திலும், ஹோட்டல் சட்டத்திலும், நேற்று முன் தினம் விவாதித்த பீடித் தொழிலாளர் சட்டத்திலும் அந்தவிதமான உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. அதேபோன்ற உரிமை எல்லாத் தொழிலாளர்களுக்கும் கொடுத்து விட்டால் தொழில் தகராறுகள் கோர்ட்டுக்கு போவது குறைந்து விடும் என்று சர்க்கார் கருதுகிறது. அதுபற்றி பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

Sri C. NATARAJA ODAYAR : தொழில் தகராறு சம்பந்தமாக உதாரணமாக பஸ் கண்ட்ராக்டர் மாதிரியுள்ளவர்கள் இன்ஸ்பெக்டர் அவர்களிடம் கேஸ் கொடுத்தால் முடிவு தெரிய இரண்டு வருஷங்கள் ஆகிறது. காரணம், தொழில் அதிகாரிகள் முதலாளிகளுக்கு சம்மன்ஸ் அனுப்பினால் இரண்டு வருடங்கள் கழிந்தும்கூட அவர்கள் ஆஜராவதில்லை. அவர்கள் பேரில் நடவடிக்கைகள் எடுக்கும் அதிகாரம் அதிகாரிகளுக்கு இல்லையென்றும் சொல்லப்படுகிறது. ஆகவே இதைப்பற்றி ஆலோசித்து சர்க்கார் ஒருமுடிவிற்கு வருமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்வது, ஒரு வருடத்திற்கு முன் உள்ள நிலையாக இருக்கலாம். இப்பொழுது முதலாளிகளுக்கு சம்மன்ஸ் அளித்து, அவர்கள் வராவிட்டால் உடன்டியாக லேபர் ஆபீசர்கள் அவர்களுடைய சிபார்சை சர்க்காருக்கு எழுதியனுப்பும்படி உத்திரவு போட்டிருக்கிறோம்.

### *Srivaikuntam Anicut*

* 262 *Q.*—Sri M. K. SOMASUNDARAM (on behalf of Sri M. S. Selvarajan) : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the quantity of water that flowed down the Srivaikuntam Anicut in the Tirunelveli district as waste water, for the last ten years, yearwar;

(*b*) the quantity of water that flowed down this year from the anicut, as waste, before the completion of the Manimuthur Project and after it; and

(*c*) whether any proposal for utilising this water for irrigation by constructing a bed dam near Kurangani or anywhere below in Tiruchendur taluk or diverting the water to flow into the Kudiraimozhitheri has been considered and worked upon?

The Hon. Sri P. KAKKAN : (*a*) *to* (*c*) The attention of the Member is invited to the paper[a] laid on the table of the House.

### *Wells*

* 263 *Q.*—Srimathi T. N. ANANDANAYAKI : Will the Hon. the Minister for Home be pleased to state when the subsidy or loan given by the Government for digging wells for irrigational purposes by the Agriculturists was stopped and the reasons for the same?

---

[a] Printed as Appendix V on pages 100–101 infra.